OL/2016/45-T-I,II (NEW)



නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

45 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

භරත නැටුම් I, II
பரதநாட்டியம் I, II
Bharatha Dancing I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## பரதநாட்டியம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** தியான ஸ்லோகத்தின் மூலம் சிவனின் ஆபரணமாகக் கூறப்படுவது
(1) புலித்தோல் (2) உடுக்கு (3) சூரியன் (4) சந்திரன்

**2.** இரட்டைக்கை முத்திரையினை சமஸ்கிருதத்தில் இவ்வாறு அழைப்பர்
(1) ஸ்லோகங்கள் (2) ஸம்யுதஹஸ்தம்
(3) அஸம்யுதஹஸ்தம் (4) பேதங்கள்

**3.** விளம்பிதகாலம் என்பது
(1) 1 ஆம் காலம் (2) 2 ஆம் காலம் (3) 3 ஆம் காலம் (4) ஏகதாளம்

**4.** கம்பத்தில் பறக்கும் கொடியைப் பார்ப்பதற்குப் பிரயோகிக்கப்படும் சிரோபேதம்
(1) பராவிருத்தம் (2) அதோமுகம் (3) உத்வாகிதம் (4) துதம்

**5.** "பாதசாரிகா" என்னும் பாதநிலையின் செயற்பாடு
(1) பாய்தல் (2) சுற்றுதல் (3) அரைமண்டி (4) நடத்தல்

**6.** இரண்டு கைகளிலும் திரிபதாக ஹஸ்தம் பிடித்து அபிநயிக்கக் கூடிய இரண்டு தேவ ஹஸ்தங்கள்
(1) விஷ்ணு, சிவன் (2) விஷ்ணு, இந்திரன்
(3) இந்திரன், அக்கினி (4) விநாயகர், லட்சுமி

**7.** பாத்திரங்களின் இயல்பான நடத்தைகளைக் காட்டுவது
(1) லோகதர்மி (2) நாட்டியதர்மி (3) முத்திரைப்பிரயோகம் (4) அபிநயம்

**8.** பஞ்ச பாணங்களில் சோகத்தினை உண்டாக்கும் மலர்
(1) தாமரைப்பூ (2) அசோகம்பூ (3) மாம்பூ (4) முல்லைப்பூ

**9.** உத்சங்கம், சிவலிங்கம் இதனை அடுத்து வரும் ஹஸ்தம்
(1) கடகாவர்த்தனம் (2) டோலம்
(3) கர்த்தரீஸ்வதிகம் (4) புஷ்பபுடகம்

**10.** பரதநாட்டியக் கச்சேரி அமைப்பு முறையில் ஜதீஸ்வரம் என்னும் உருப்படியைத் தொடர்ந்து வருவது
(1) அலாரிப்பு (2) தில்லானா (3) சப்தம் (4) வர்ணம்



[பக். 2 ஐப் பார்க்க

11. கண்டிய நடனத்தின் பாதநிலை
(1) மண்டிய (2) ஆயத்தம் (3) ஆலீடம் (4) பிரேங்கணம்

12. // இவ் அடையாளம் குறிப்பது
(1) த்ருதம் (2) அனுத்ருதம் (3) ஆவர்த்தனமுடிவு (4) லகு

13. கூத்தினைப் பயிற்றுவிப்பவர்
(1) நட்டுவனார் (2) அண்ணாவியார்
(3) வாத்தியக்காரர் (4) அணிசேர் கலைஞர்கள்

14. மகாபலி சக்கரவர்த்தியின் கர்வத்தை அடக்க விஷ்ணு எடுத்த அவதாரம்
(1) பரசுராம அவதாரம் (2) பலராம அவதாரம்
(3) நரசிம்ம அவதாரம் (4) வாமன அவதாரம்

15. மத்தளம், தாளம், குழல், வீணை போன்றன
(1) பகிப்பிராணன்களாகும். (2) பாத்திரப்பிராணன்களாகும்.
(3) அந்தப்பிராணன்களாகும். (4) பாத்திர இலட்சணங்களாகும்.

16. ஒரு கையால் அறைந்தும், மறு கையில் கழியினால், கொட்டியும் வாசிக்கும் வாத்தியம்
(1) மிருதங்கம் (2) உடுக்கு (3) தவில் (4) கெஞ்சிரா

17. "கிருஷ்ணா நீ பேகனே பாரோ" என்ற பாடலைப் பாடியவர்
(1) பாரதியார் (2) சியாமாசாஸ்திரிகள்
(3) புரந்தரதாஸர் (4) தியாகராஜ சுவாமிகள்

18. தஞ்சைப் பெருங்கோயிலில் ஆயிரம் நடனக் கலைஞர்கள் கலந்துகொண்ட நடன நிகழ்விற்குத் தலைமை தாங்கியவர்
(1) பாலசரஸ்வதி அம்மா (2) பத்மா சுப்பிரமணியம் (3) தனஞ்சயன் (4) ருக்மணி அருண்டேல்

19. சிவபெருமானின் திருக்கரத்திலுள்ள துடி என்பது
(1) உடுக்கு (2) சூலம் (3) பாம்பு (4) தீ

20. ஓடிசி நடனம் ஆடப்படும் மாநிலம்
(1) கேரளா (2) தமிழ்நாடு (3) ஆந்திரா (4) ஓரிஸா

21. அலாரிப்பில் எத்தனையாவது மண்டியடவு பயன்படுத்தப்படுகின்றது?
(1) 1 ஆவது (2) 2 ஆவது (3) 3 ஆவது (4) 4 ஆவது

22. $|_4 |_4$ O O இவ் அடையாளத்தினை எடுத்துக்கொள்ளும் தாளம்
(1) கண்டஜாதி அடதாளம் (2) சதுஸ்ரஜாதி துருவதாளம்
(3) சதுஸ்ரஜாதி அடதாளம் (4) சதுஸ்ரஜாதி திரிபுடைதாளம்

23. வடபாங்கு, தென்பாங்கு எனும் கூத்துக்கள் ஆடப்படும் இடம்
(1) யாழ்ப்பாணம் (2) மன்னார் (3) மலையகம் (4) முல்லைத்தீவு

24. பாந்தவ்ய ஹஸ்தங்கள் குறிப்பிடுவது
(1) தெய்வ நிலைகளை (2) நவக்கிரகங்களை (3) அவதாரங்களை (4) உறவு முறைகளை

25. பல்லவர் காலம் எனப்படுவது
(1) 1 - 3 வரையான நூற்றாண்டு (2) 3 - 6 வரையான நூற்றாண்டு
(3) 6 - 9 வரையான நூற்றாண்டு (4) 9 - 12 வரையான நூற்றாண்டு

26. தட்சணமேரு என அழைக்கப்படும் நெடிதுயர்ந்த ஸ்ரீ விமானத்தின் பெயரைக் கொண்ட ஆலயம்
(1) தஞ்சைப் பெருங்கோயில் (2) சிதம்பரம்
(3) திருவெண்ணாமலை (4) சாரங்கபாணி

27. நாட்டிய சம்பிரதாய உருப்படிகளில் கண்டிகைகளாக வகுக்கப்பட்ட உருப்படி
(1) ஜதீஸ்வரம் (2) பதம் (3) ஜாவளி (4) சப்தம்

28. "அங்காரகன்" என்று அழைக்கப்படுபவர்
(1) வியாழன் (2) செவ்வாய் (3) வெள்ளி (4) குபேரன்

[பக். 3 ஐப் பார்க்க

**29.** சிவபெருமான் சிதம்பரத்தில் ஆடிய தாண்டவம்
(1) திரிபுர தாண்டவம் (2) காளி தாண்டவம் (3) ஆனந்த தாண்டவம் (4) சந்தியா தாண்டவம்

**30.** அனுபாவம் என்பது
(1) அங்க சேட்டைகள் (2) தம்மை அறியாத செயற்பாடு
(3) நாயகன், நாயகி (4) இயற்கைக் காட்சிகள்

**31.** 1 ஆவது "தெய் தெய் தத்தா" என்னும் அடவு அமைந்துள்ள தாளம்
(1) அடதாளம் (2) ரூபகதாளம் (3) ஆதிதாளம் (4) ஏகதாளம்

**32.** 17 மொத்த அட்சர எண்ணிக்கையை எடுத்துக் கொள்ளும் தாளம்
(1) மிஸ்ரஜாதி மட்டியதாளம் (2) கண்டஜாதி துருவதாளம்
(3) சங்கீர்ணஜாதி திரிபுடைதாளம் (4) கண்டஜாதி அடதாளம்

**33.** "கிடதக தரிகிடதொம்", "ததிங்கிணதொம்" போன்ற அடவுகள்
(1) கோர்வையின் ஆரம்பத்தில் வருவன (2) கோர்வையின் மத்தியில் வருவன
(3) கோர்வையின் ஆரம்பத்திலும் இறுதியிலும் வருவன (4) கோர்வையின் இறுதியில் வருவன

**34.** தெய்,; தெய்,; தாம்;;; இதன் மாத்திரைகள்
(1) 16 (2) 18 (3) 21 (4) 24

**35.** மெய்யடவு முதன்முதலில் இடம்பெறும் பரதநாட்டிய சம்பிரதாய உருப்படி
(1) அலாரிப்பு (2) ஜதீஸ்வரம் (3) சப்தம் (4) வர்ணம்

● **36** தொடக்கம் **40** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலுமுள்ள கீறிட்ட இடத்திற்குப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**36.** கூத்தில் வெள்ளுடுப்பு நிலையில் ஒரு முழு இரவும் ஒத்திகை பார்த்தல் என்பது ...................... எனப்படும்.
(1) ஊருக்குச் செல்லல் (2) சட்டம் கொடுத்தல் (3) அடுக்குப் பார்த்தல் (4) தினக்கூத்து

**37.** வீர ரஸத்திற்குப் பொருத்தமான நிறமாக ...................... கருதப்படுகின்றது.
(1) பொன்னிறம் (2) கறுப்புநிறம் (3) வெள்ளைநிறம் (4) நீலநிறம்

**38.** புல்லாங்குழலிலுள்ள ஸ்வரத்துளைகள் ...................... ஆகும்.
(1) 5 (2) 6 (3) 7 (4) 8

**39.** ஸ்ரீமதி ருக்மணி அருண்டேல் அவர்களால் பரதநாட்டிய சம்பிரதாய உடையாக ...................... அறிமுகப்படுத்தப்பட்டது.
(1) சேலை (2) பஞ்சகச்சம் (3) பாவாடை (4) தாவணி

**40.** கஞ்சற் கருவி என்பதற்கு உதாரணமாக அமைவது ...................... ஆகும்.
(1) நாதஸ்வரம் (2) கிளர்னட் (3) தபேலா (4) தாளம்

* *

/பக். 4 ஐப் பார்க்க

නව නිර්දේශය/புதிய பாடத்திட்டம்/New Syllabus

NEW

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

45 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2016 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2016 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2016

භරත නැටුම් I, II
பரதநாட்டியம் I, II
Bharatha Dancing I, II

## பரதநாட்டியம் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.

(i) பரவல் அடவு எத்தனை வகைப்படும்?
(ii) சங்கமருவிய காலத்துக்குரிய பதினொருவகை ஆடல்களையும் கூறும் நூல் எது?
(iii) திரியங்கங்களுள் ஜாதி பேதத்தினால் மாற்றமடையும் அங்கம் எது?
(iv) மத்சய அவதாரத்தில் பிரம்ம தேவரிடமிருந்த வேதத்தை அபகரித்துக் கொண்ட அசுரனின் பெயர் யாது?
(v) உடுக்கையின் வகைகள் எத்தனை?
(vi) வழுவூர் பாணியைத் தோற்றுவித்தவர் யார்?
(vii) மாணவர்கள் குருவிற்குப் பணிசெய்து, அவர்களுடைய வீட்டிலேயே தங்கி கலைகளைப் பெறும்முறையை எவ்வாறு அழைப்பர்?
(viii) கதகளி நடனத்தில் பயன்படுத்தப்படும் முக்கிய தோல் வாத்தியம் எது?
(ix) வாஸ்சல்ய பாவத்தில் காணப்படும் **இரு** உறவுமுறைகள் எவை?
(x) கேரள மாநிலத்திற்குரிய **இரு** நடனங்களும் எவை?

**2.** (i) பரதநாட்டிய சம்பிரதாய உருப்படிகளில் சாகித்தியத்துடன் ஆடப்படும் மூன்றாவது உருப்படி எது?
(ii) இவ் உருப்படியின் இலட்சணத்தை எழுதுக.
(iii) நீர் கற்ற இவ் உருப்படியின் 1 ஆவது கண்டிகையின் இராகம், தாளம் அதன் சாகித்தியத்தின் பொருள் என்பவற்றை விளக்கி எழுதுக.

**3.** பின்வரும் ஹஸ்தங்களுக்குரிய விநியோகங்களை, ஸ்லோகத்துடனும் அதன் கருத்துடனும் எழுதுக.
(i) பாசம (ii) கட்வா (iii) கர்த்தரீஸ்வஸ்திகம் (iv) பேருண்டம்

**4.** பந்தணை நல்லூர் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாற்றினை பின்வரும் அம்சங்களைக் கருத்திற்கொண்டு விளக்குக.
- தோற்றம்
- வாழ்க்கைப்பின்னணி
- கலைத்தொண்டு
- பந்தணை நல்லூர் பாணியின் சிறப்பு

**5.** பின்வருவனவற்றிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.
(i) தாண்டவம் (ii) சிஷ்ய இலட்சணம் (iii) ஏந்தல் நடனம்

**6.** தொழில்சார் நடனங்கள் இரண்டு பற்றிப் பின்வரும் அம்சங்களை அடிப்படையாகக்கொண்டு விளக்குக.
- தொழிலின் அம்சம் (ஆடல் அசைவு)
- ஆடை ஆபரணம்
- இசைக்கருவிகள்
- நடனத்திற்குப் பொருத்தமான இரு பாடல் அடிகள்

**7.** நீர் பார்த்து இரசித்த நடன நிகழ்வொன்றினை பின்வரும் விடயங்களைக் கருத்திற் கொண்டு விமர்சிக்குக.
- ஆங்கிகா அபிநயம்
- ஆகார்யா அபிநயம்
- வாச்சிகா அபிநயம்
- சாத்வீகா அபிநயம்

* * *